THE HON. SRI C. SUBRAMANIAM : It is a suggestion for action. As a matter of fact, this Government have taken into confidence the Opposition parties also in various matters. As a matter of fact the entire matter has been discussed in this House where all the parties are represented.

SRI A. GOVINDASAMI : இப்பொழுது ஒதுக்கியிருக்கிற 152 கோடி ரூபாய் போதாது என்று பிளானிங் கமிஷனிலே நமது நிதி அமைச்சர் அவர்கள் வாதாடியது உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எப்பொழுதும் நாம் போதும் என்று சொல்வோமேயானால் அது நம்முடைய முன்னேற்றத்திற்கு அறிகுறியில்லை. போதாது என்கிற நிலையில் இருக்கும்பொழுதுதான் வேண்டிய அளவு முயற்சி செய்துகொண்டிருக்கிறோம் என்று அர்த்தம். இந்த 152 கோடி ரூபாய் செலவழிக்க முடியவில்லை என்றால் அதற்கான நடவடிக்கைகளை நாம் எடுத்துக்கொள்ளவில்லை என்பதுதான் அர்த்தம்.

SRI S. RAMALINGA PADAYACHI : 2, 3 ஆண்டுகளுக்கு முன்னால் விவசாயிகளுக்கு கடன் கொடுக்கப்பட்டது. கடன் கொடுக்கும் பொழுது வட்டி இல்லை என்று சொல்லப்பட்டது. வசூலிக்கும்போது வட்டியுடன் வசூலிக்கப் பட்டது. இடையிலே அரசாங்கம் ஏதாவது மாறுதல் செய்தது உண்டா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : மூல கேள்விக்கும் இதற்கும் சம்பந்தமே யில்லை. மூல கேள்வி தேசீய அபிவிருத்தி கௌன்சிலைப்பற்றியது.

SRI T. VELUCHAMI : நமது ராஜ்யத்திலே செமெண்ட் தொழிற்சாலைகளை ஆரம்பிக்க தனியாரை நாம் எதிர்பார்க்கிறோம். நாம் அனுஷ்டிக்கும் கொள்கை சோஷலிஸக் கொள்கையாக இருப்பதனால், எந்தத் தொழிலையும் எந்த நேரத்திலும் சர்க்கார் தேசீயமயமாக்கு வார்களோ என்று அவர்கள் தொழிற்சாலைகளை ஆரம்பிக்கத் தயங்குகிறார் கள். இந்த நிலைமை இந்த அபிவிருத்திக் கவுன்சிலிலே விவாதிக்கப் பட்டதா ? ஒரு குறிப்பிட்ட காலவரைக்குள் அம்மாதிரி தொழில்களை "நேஷனலைஸ்" செய்யமாட்டோம் என்பதுபோன்ற பரிகாரங்கள்பற்றி யோசனை செய்யப்பட்டதா ?

MR. SPEAKER : மூல கேள்வியிலிருந்து இந்த உப கேள்வி எழ வில்லையே.

SRI T. SAMPATH : அமைச்சர் அவர்களின் பதிலில் விவசாயத் திற்காக ஒதுக்கப்பட்ட தொகை பூராவும் செலவு செய்ய முடியவில்லை என்று சொன்னார்கள். அதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதற்குக் காரணம் போதிய அளவு பயிற்சி பெற்ற ஆட்கள் நம்மிடத்தில் இல்லை. ஆகை யால் சிறிது சிறிதாகத்தான் நாம் ஏற்பாடு செய்யவேண்டியிருக்கிறது. ஆகையால் எந்த அளவுக்கு செலவு செய்ய முடியுமோ அந்த அளவுக்குச் செலவு செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

### *Colleges for Women*

*442 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கவர்ன்மெண்டாலும், தனிப்பட்டவர்களாலும் நடத்தப்படும் பெண்கள் கல்லூரிகள் எந்தெந்த இடங்களில் இருக்கின்றன ?

23rd September 1958]

(ஆ) இக்கல்லூரிகள் ஒவ்வொன்றிலும் 1957–58-ம் வருஷத்திலே படித்தவர்கள் எத்தனை பேர் ?

(இ) இவர்களுள், ஹரிஜனங்கள் எத்தனை பேர் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a), (b) & (c) A statement [a] is laid on the table of the House.

SRI P. G. MANICKAM : கல்லூரிகளிலே படிக்கும் மாணவிகளிலே 100-க்கு 1 சத விகிதம்கூட ஹரிஜன மாணவிகள் படிப்பதாகத் தெரியவில்லை. ஆகையால் ஹரிஜன மாணவிகளுக்கு சலுகைகள் கொடுத்து அதன் மூலம் அதிக மாணவிகள் படிப்பதற்கான வாய்ப்பை சர்க்கார் ஏற்படுத்துவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எஸ்.எஸ்.எல்.ஸி. பாஸ் பண்ணினவர்கள்தான் கல்லூரிக்குப் போக முடியும். எஸ்.எஸ்.எல்.ஸி. பாஸ் பண்ணாமல் கல்லூரிக்குப் போக முடியாது. அப்படி பாஸ் பண்ணியார் யார் விண்ணப்பித்துக்கொண்டார்களோ அவர்கள் எல்லோருக்கும் இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

SRI K. R. VISWANATHAN : கோயம்புத்தூர் அவிநாசிலிங்கம் ஹோம் ஸயன்ஸ் கல்லூரியிலே இருக்கும் 56 பேரிலே ஹரிஜன மாணவிகள் ஒருவரும் இல்லை. இந்த ஹோம் ஸயன்ஸ் கல்லூரியில் ஹரிஜன மாணவிகள், பின் தங்கிய வகுப்பைச்சேர்ந்த மாணவிகள் சேர்க்கப்பட்டால் இம்மாதிரி துறையில் பயிற்சி பெறுவதற்கு வாய்ப்பு இருக்கும்.

MR. SPEAKER : Let the hon. Member resume his seat. He is making a speech. He must ask questions. Next question.

*Travelling allowance drawn by Ministers*

MR. SPEAKER : The hon. Member Sri Authimoolam is not in his seat. The question and the answer will be printed in the proceedings.

* 443 *Q.*—SRI D. S. AUTHIMOOLAM : Will the Hon. the Minister for Finance be pleased to state the amount of travelling allowance drawn by each Minister in 1957–58?

THE HON. SRI C. SUBRAMANIAM : A statement [b] is laid on the table of the House.

*Rural indebtedness*

* 444 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal for scaling down debts incurred by peasants?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI N. K. PALANISAMI : உணவு உற்பத்தியை அடிப்படையாக வைத்துக்கொண்டு இம்மாதிரி கொடுக்க முடியாத கடன்களை எல்லாம் ஆந்திர சர்க்கார் செய்தது போல ஒரு பரிசீலனைக் கமிட்டியை நியமித்து ஏற்பாடு செய்யக்கூடாதா என்று கேட்கிறேன் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கேள்வியானது scaling down of debts-ஐப் பற்றியது. ஏதாவது திட்டமிருக்கிறதா என்று கேட்டதற்கு "இல்லை" என்று பதில் சொன்னேன்.

[a] Printed as Appendix IV on pages 583–584 infra.

[b] Printed as Appendix V on page 584 infra.